உ

# தமிழ்ப் பொழில்.

தஞ்சை, கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் ரு | சுக்கில—ஆவணி | மலர் ரு |

## நடுத்தரக் கல்வி முறையின் மறு அமைப்பு.

திரு. ஊ. சா. வேங்கடராம ஐயர் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்,
கும்பகோணம்.

சிலநாட்களின் முன் (20—8—29) வெளிவந்த சென்னை மாகாணத் துரைத்தனத்தாரின் 'கெசட்டிலே' பொதுமக்களின் அறிவிப்புக்காக 'நடுத்தரக் கல்விமுறை' (S. S. L. C.) யின் மறு அமைப்பு விவரம் வெளியிடப்பட்டுள்ளது. இதன் முழுவிவரமும் தனிப்புத்தகமாகவும் வெளியிடப்பெற்றுள்ளது. இம்மறு அமைப்பு இன்னும் துரைத்தனத்தாரால் ஒத்துக் கொள்ளப்படவில்லையாதலின் அதுபற்றிச் சில கூறுவது மிகையாகாது. ஆதலின் ஈண்டுச் சிலவற்றைக் கூறுவேன். எனினும், நான் இங்கே கூறப்புகுந்தது அதன் முழுவிவரத்தையும்பற்றிய ஆராய்ச்சியன்று. நிலத்துமொழிகளைப் பற்றியவரையில் அதனுட் காணப்படுவதைப் பற்றியே கூறப்புகுந்தது.

எந்த நாகரிக நாட்டிலும் நிலத்துமொழி—தாய்மொழி—யைக் கற்காமல் பட்டதாரிகளாகப் பட்டம்பெற்றுத் தகுதியுடையவர்

களாகும் நிலைமை மாணுக்கர்களுக்குக் கிடைப்பதரிது. ஆனால் அந்த இழிவான நிலைமையை "இருள்சூழ்ந்த மாகாணம்" என்ற சிறப்பினைப்பெற்ற சென்னை மாகாணத்திலே, அதிலும் சிறப்பாகத் தமிழ் நாட்டிலே தவருது காணலாம். ஆனால், இந்த ஆராய்ச்சிக்கு உரிய மறு அமைப்பில் எல்லா நிலத்து மொழிகளும் ஒரே வகையாக்கப் பட்டுள்ளன.

நமது மாகாணத்தின் கல்விமுறை மூன்று பிரிவினையுடையது. அது ஆரம்பக்கல்வி, நடுத்தாக்கல்வி, உயர்தாக்கல்வி என விரியும். ஆரம்பக் கல்வியோ அனைவர்க்கும் இன்றியமையாததாய், முற்றுந் தாய்மொழியாலேயே கற்பிக்கக் கூடியதாய், எனைத் துறைகளில் முயன்ருல் ஒரு சிறிதும் பயன்தாராததாப் இருப்பது. இது, மனிதரை விலங்கினத்தினின்றும் வேறுபடுத்து மளவில் அமைவதே யன்றிப் பயன் படுவதொன்றன்று. உயர்தாக்கல்வியோ, மிகச்சிறந்த அறிவு சான்ற ஆராய்ச்சியாளர்க்கும், பெரும் பொருளாளர்க்குமே நலம் பயப்பதாக இருப்பது; சிற்சில உத்தியோகங்களைப் பெறுவதற்கும் துணை செய்யக் கூடியது. ஊன்றிநோக்க மிகச்சிறந்த ஆராய்ச்சியாளர்களின் நல்லுழைப்பால் ஆங்காங்குத் தோன்றும் சிற்சில நன்மைகளைத் தவிர, இந்த உயர்தாக் கல்விமுறையால் நாட்டினர்க்கு எதும் பெரும்பயன் உண்டாகிவிடவில்லை. பெரும் பொருட்செலவும், வேலையில்லாத் திண்டாட்டம் என்ற அவச்சொல்லும், தத்தம் முன்னேற்ற அவாவால் உண்டாகிய போட்டியுமே கண் கண்டவை.

ஆனால், நடுத்தாக்கல்வியோ அத்தகையதன்று. கற்றூர் பலர்க்கும் ஓரளவிலேனும் பயன் தந்து நிற்பது நடுத்தாக் கல்வியே யாகும். துரைத்தனம், நாட்டாண்மை முதலிய பொது நன்மைக்குத் துணைசெய்யும் தாபனங்களை நடத்துவதற்கு அச்சாணி போன்றவர் இந்த நடுத்தாக் கல்வியைக் கற்றவரே. நாட்டினரின் கல்வி வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படையான நடுத்தாக்கல்வி, துரைத்தனம் நடைபெறுதற்கு இன்றியமையாதது. வரி வசூல் செய்தல் முதலிய கிராம உத்தியோகம் என்றவற்றிற்கு முன்னின்று உழைக்க வேண்டியவர்களும் இந்த நடுத்தாக் கல்வி

யைக் கற்றவர்களே. சுருங்கக்கூறின் நடுத்தரக் கல்வியாளராலேயே பொதுமக்கள் நன்மைக்கான அரசியல், நாட்டாண்மை, சமூகம் முதலியவற்றின் வேலைகள் இனிது நடைபெற வேண்டியன என்பது தவறாகாது.

இத்துணைச் சிறந்ததும், இன்றியமையாததும் ஆகிய நடுத்தரக் கல்வியைத் தமக்கும், நாட்டினர் பலர்க்கும் பயன்படவேண்டிக் கற்பவர், கற்றவர் எத்தகையினராய் இருத்தல்வேண்டும்! அன்னார் தமது நிலத்துமொழி அறிவிலே மிக்கவராய்ப் பொதுமக்களுடன் தமது தாய்மொழியிலேயே இனிது பேசிப் பழகி அவர்களுக்கு நன்மையினைச் செய்பவராய் இருத்தல் வேண்டுமல்லவா? இந்தத் தகுதியைப்பெறத் தாய்மொழிப் பயிற்சி அதிகமாக இருத்தல் அவசியமல்லவா? தாய்மொழியையே படிக்காமல் ஆங்கிலம், வடமொழி முதலியவற்றை மாத்திரம் படித்துத் தேறியவர்கள் எப்படித் தமிழ் முதலிய தாய் மொழிகளை மாத்திரம் அறிந்துள்ள பொதுமக்களுடன் இனிது பழகி அவர்களது கருத்தைத்தெரிந்து நன்மையினைச் செய்ய இயலும்? தாய் மொழியையே படிக்காத நடுத்தரப் படிப்புள்ளவர் பிற்காலத்தில் உபாத்தியாயராக வந்தால் எப்படிக் குழந்தைகளுக்குத் தாய்மொழியைக் கற்பிப்பது? இக்காலம் பல ஆங்கிலக் கலாசாலைகளிலே மூன்றுவது பாரம் வரையில் அந்த நடுத்தரக் கல்வியாளர்களே தமிழ்ப்பாடங்களையும் கற்பிக்க வேண்டியவர்களாகிறார்கள். அவர்கள் தாய் மொழிகளைக் கற்பிக்குங்கால் அடையும் தொல்லைகளைக் கடவுளே அறிவர்! அவர்கள் எவ்வளவு சிறந்த புத்தகமாயிருந்தாலும் உரை இல்லாததாயின் அதனைப்பாடப்புத்தகமாக ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். நல்ல நடையிலே எழுதப்பட்ட உரைநடைகளைக் கண்டால் அவர்கள் பெரிதும் வெறுத்து ஒதுக்குவார்கள். தங்களது தாய்மொழிப்பயிற்சியின்மையை அவர்கள் தங்களிடம் கற்க வரும் மாணாக்கர்களுக்கும் ஏற்ற முயலுகிறார்கள். இத்தகையினர் தங்களுக்குத் தாய்மொழியைக் கற்பிக்கத்தெரியாது என்று மாத்திரம் சொல்லிக்கொள்வதில்லை! பள்ளிக்கூட நிருவாகர்களும் இந்த உண்மையைக் கவனிப்பதில்லை. சிக்கன முறை என்று சொல்லிக்கொண்டு நிலத்து மொழிப்புலவர்களை ஆசிரியர்களாக

நியமிப்பதில்லை. மேலதிகாரிகளும் இவ்விடயத்திலே கவனஞ் செலுத்துவதில்லை. ஆ! என்னே தாய் மொழியின் நிலைமை!

தமிழ் நாட்டிலே தமிழரசர்கள் ஆண்டுவந்த காலத்திலே தமிழ்க் கல்வியறிவு மிகச் சிறந்ததாயிருந்தது. கால வேறுபாட்டால் அரசு நிலைமாறத் தமிழ்க்கல்வி அழிவுறலாயிற்று. பின்னர், ஆங்கில ஆட்சியில் அது மீட்டும் உயர் நிலைபெறலாமோ என நினைக்க இடம் ஏற்பட்டது. ஆனால், அந்த ஆட்சியின் பெயரைச் சொல்லிக்கொண்டு அலுவல்புரிந்த சிலரது சூழ்ச்சியினாலோ, ஆராய்ச்சியின்மையினாலோ, அது கேடுற்றது. ஆயினும், உயர் தரக்கல்வியின் முதற்படி வரையில் ஒரு தமிழ் உரைநடை நூலையேனும் எல்லா மாணாக்கர்களும் கட்டாயமாகப் படிக்கவேண்டும் என்றும், தமிழ்க் கட்டுரையை வரைய வேண்டும் என்றும் திட்டம் இருந்தது. இப்பொழுதுள்ள ஆட்சியிலோ அது மிக அதிகமாகக் கேடுற்றுத் தவிக்கின்றது. S. S. L. C. முறையிலே எல்லாப் பிள்ளைகளுக்கும் தாய்மொழிச் செய்யுள், தாய்மொழிக் கட்டுரை, ஆங்கிலத்திலிருந்து தாய்மொழியில் மொழி பெயர்த்தல் என்ற மூன்றும் ஒரு தனி வினாப்பத்திரமாகவும், கட்டாயப் பாடமாகவும் அமைந்திருந்தது. இந்த மறு அமைப்பு முறையோ தாய்மொழியின் காற்றும் படாமலே தேர்ச்சிபெற்றுவிடலாம் என்று திட்டம் செய்கிறது. பழைய முறையே தமிழ்க் கல்வியறிவை வளர்க்கப்போதிய தாகாது என்ற முறைப்பாடு மிகமிக அதிகமாக இருந்தது. அம்முறைப்பாட்டைத் தீர்க்கவந்ததுபோன்ற புது மாறுதலிலோ "உள்ளதும் போச்சடா நொள்ளைக் கண்ணா" என்பதுபோலத் தமிழ்க்கல்வியே—தாய்மொழிக் கல்வியே-இல்லாமல் ஆங்கிலம், வடமொழி என்றவற்றை மாத்திரம் கற்றுப் பரீட்சையிலே தேறித் தகுதிச் சீட்டைப் பெற்றுவிடக்கூடிய வசதி செய்யப்பட்டுள்ளது. இந்த மறு அமைப்பு முறையினால் வரும் கேடும், பயனின்மையும் முன்னரே விளக்கப்பட்டுள்ளன. இம் முறையிலே பயின்று தகுதிச் சீட்டைப் பெற்றவர் உபாத்தியாயராகவும், பிற உத்தியோகத்தராகவும் இருந்து எப்படிப் பொது மக்களுக்கு நன்மையினைச்செய்ய இயலும்? அவர்களை அந்த உத்தியோகங்களுக்கு வராமல் தடுக்க யாரால் முடியும்? இது

இறுதியில் "குருடனை அரசவிழி விழிக்கச் செய்வது" போலாகிப் பயன்தராதொழிய வேண்டியதே. இது நாட்டிற்கு நன்மையைச் செய்யுமா?

இவ்வளவேயோ அம்மறு அமைப்பில் உள்ள தீமை! தனியே தாய்மொழி இலக்கிய, இலக்கணங்களில் வைத்திருந்த விஞாப்பத்திரத்துடன் ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கும் பகுதியும் சேர்க்கப்படுமாம். இஃது ஒருபெருஞ் சூழ்ச்சியாகவே இருக்கின்றது. துரைத்தனத்தார் தேயமொழிகளைத் தனியே கற்பித்து 'வித்துவான்' 'சிரோமணி' போன்ற பட்டங்களை அளித்துவருகின்றனர். இங்ஙனம் செய்து வருவதன் நோக்கம் உரிய காலத்தில் அவர்களுக்கும் பிற உபாத்தியாயர்களுக்குரிய மரியாதை, ஊதியம் முதலியன கிடைக்கச்செய்யவேண்டும் என்பதே. இங்ஙனம் ஒருபுறம் அறிஞர்களை உண்டுபண்ணி, வேறொருபுறம் அவர்களுக்கு மதிப்பும், தனிச்சிறப்பும் கொடாமல் இருக்கத்தக்க வசதிகளை உண்டுபண்ணுவது எங்ஙனம் நியாயமாகும்? தமிழ் முதலிய நாட்டுமொழிகள் தனிமொழிகள் அல்லவோ? அவற்றிற்கும் தனியே விஞாப்பத்திரம் இருக்க வேண்டாமா? அவற்றைக் கற்பிப்பவர் சுயேச்சையாக இருக்கத் தடை உண்டாக்கலாமா? அன்றியும் மாணக்கர்கள் "இலக்கிய இலக்கணங்களில் ஏன் வருத்தப்பட்டு முயலவேண்டும்? மொழிபெயர்ப்பிலே சேர்த்து மார்க்கு வாங்கிவிடலாம்" என்று கருதி அலட்சியம்பண்ண இந்த முறை இடந்தராதா?

போகட்டும் இன்னும் காலந்தவறிவிடவில்லை. பரீட்சைக்கு இன்னும் இரண்டு ஆண்டுகள் இருக்கின்றன. மனம் வைத்து உண்மையையும் நியாயத்தையும் உணர்ந்து நாட்டிற்கு நன்மையைச் செய்ய விரும்பினுல் மிக இலகுவாக இந்த நிலைமையை மாற்றிவிடலாம். அதற்கெனப் பொருட் செலவுமில்லை. அதிக உபாத்தியாயர்களின் தேவையுமில்லை. "அஜாககளஸ்தம்" போல ஒரு பயனும்படாத 'மானியூல் டிரெயினிங்' போன்ற பாடங்களுக்குப் 'பரீட்சையும் வேண்டாம். மார்க்குமாத்திரம் போட்டாற் போதும்' என்று கூறிப்பாடங்களாகச் சேர்த்தவர்களுக்குத் தாய்மொழியின் இன்றியமையாமையும், மேன்மையையும், பயனையும் அதிகம் விரித்துரைக்க வேண்டியதில்லை.

இப்பொழுது செய்திருக்கும் நடுத்தரக்கல்வி மறு அமைப்பின் போக்கிலே தாய்மொழிகளைப்பற்றிச் செய்திருக்கும் சிறப்பான மாறுதலுடன் ஒவ்வொரு மாணவரும் "தாய்மொழித் தனிப்பாடம் (இலகுவான வசனம்), தாய்மொழிக் கட்டுரை, ஆங்கிலத்தினின்றும் மொழிபெயர்த்தல் என்ற மூன்றையும் சேர்த்து ஒரு தனி விஞைப்பத்திரத்திற்கு விடையளித்தல் ; தாய்மொழி இலக்கிய, இலக்கணங்களிலே தனியே விஞைப்பத்திரத்திற்கு விடையளித்தல்" என்ற மாறுதல்களைச் சேர்க்க வேண்டியது இன்றியமையாதது என்பதே இக்கட்டுரையால் வேண்டிக் கொள்ளப்படுவது.

இச்சிறு மாறுதலும் செய்துகொடுக்க மறுக்கப்படுமாயின் அது கல்விச் சீர்திருத்தம் என்ற பெயரில் தாய்மொழிகளுக்கும், நாட்டிற்கும் பெரிய அநீதியையே செய்ததாகும். இங்குக்கூறிய உண்மைகளும், பெரும்பயனும், எளிய வழியும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளால் இனிது கவனிக்கப்படுமா ? தக்கதொரு சீர்திருத்தம் செய்து கொடுக்கப்படுமா ? நாட்டினரின் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாத் துணையாகக்கூடியது நிலத்து மொழிகளே என்ற உண்மை உணரப்பட்டு நிலைநிறுத்தப்படுமா ?

இக்காரியத்திலே பெரிதும் கவனம் செலுத்தி இதன்கண் சித்திபெற வேண்டியவர் நமது மொழியைப் பொறுத்த வளவில் தமிழ் மக்களே. அவர்களைத் தட்டி யெழுப்பி ஊக்கமளிக்க வேண்டியன ஆங்காங்குள்ள தமிழ்ச் சங்கங்களும், தமிழ்ப் பத்திரிகைகளும். அவற்றிற்கு முன்னின்று வழிகாட்ட வேண்டிய பொறுப்பு மதுரை, கரந்தை ஆகிய இடங்களிலுள்ள தலைமைத் தமிழ்ச் சங்கங்களைச் சார்ந்ததே. இந்த வேண்டுகோளை அந்தச் சங்கங்களின் நிருவாகர்கள் இனிது கவனித்துத் தக்கவாறு முயன்று தாய்மொழித் திருத்தொண்டைச் செய்து பயன் பெறுவார்களாக. துரைத்தன அதிகாரிகளும் பெருங்கருணையுடன் சீர்திருத்தம் செய்து நிலத்துமொழிகளைத் தக்க புகழுடன் நிலைநிறுத்துவார்களாக.

---

# குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்.

திரு. L. உலகநாத பிள்ளையவர்கள், நாட்டுமொழிக் கல்லூரி,
திருவையாறு.

(முற்றொடர்ச்சி துணர் 4, பக்கம் 370.)

## வாரானைப் பருவம்.

முறுகிய கலிபு முாணிய வாசு முகமலர் கருக வருகவே
முளரியின் மகளு முழுநில மகளு முறைமுறை பெருக வருகவே
குறுகிய பகைஞர் குருதியை நினது கொடுவரி பருக வருகவே
குடைபுட னிகலு குளிர்மதி பழைய குரைகடல் செருக வருகவே
யிறுகிய மகா மிடையிடை துணிய வெழுபெரு வயிறு மெபிறுமே
யெறிசெறி புகழ விடுசுடி கையினி லெழிலியு மிரிய விரியல்போய்
மறுகிய வருணன் வழிபட முதுகு வளைசிலை யபயன் வருகவே
மனுகுல திலகன் ரவிகுல திலகன் மகன்மகன் வருக வருகவே.

இரைகவர் மகா மதிநிழல் கதுவ வெறிகடல் கதுவு துவரைவெ
ளிலைமுளி யுமிழ்வ புரைபுரை மறையி லிடுதுடர் பறிபு மெழிலியோ
னுரைவளர் நிலவு முபனிட மருளு முலகறி பிறவி யுடையசே
வுடையவ னிவியி லுடுபதி மரபில் வருமவன் மருகன் வருகவே
யாவா மகளி ரெழுபுட வியினும் வருமொரு பவனிய யாவீ
தகமகிழ் பொழுது புனலா மகளி ரெழுகடல் களினு மிரியவேழ்
வரையா மகளிர் மனைதொறு மறுகி மனமுழு துருக வருகவே
மனுகுல திலகன் ரவிகுல திலகன் மகன்மகன் வருக வருகவே.

## வேறு.

உயிரில்கரு நாட ருடல்க ணடமாட வுரகர்பகு வாயி னுரிமையோ
டுதியர்குதி பாய வுதகையெழ வேவ வுவரிதிரை தீய வுடலினோர்
செயலில்குண வாயி லுடையவிழி வால வடையமலை நாடு
வகையிலே
சிதையமுனி வாறு மிரவிதன தாதன் மருகசெக தீசன் வருகவே
யயரின்மணி வீதி யசுரர்புர மேரு வனையதொரு தூணி
னிடையெழா
வவனிமுத லாய வுலகுபதி னாலு மாசுதனி யாளு
மவுணர்கோன்
வயிரவரை யாக நடுவுபிள வாக வகிருமுகி ராளி வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

தகாமண நாறு தொடையல்வட நாடர் பொருது குடல்கூட றமரிலே
தாணிதர வேறு முடைய கவிராசர் பரணிதர மீது தனிமைகூர்
சிகரவட மேரு கிரியைமதி யோடு நளினபதி யோடு மிகலியோர்
திகிரிவர வேவு குரிசில்கரி காலன் மருகசெக தீசன் வருகவே
பகரவுயர் சூத பனசபல வேரி வனசநற வோடு பருகவே
பகடுபடு வான முகடுதொட வாவு பரியபெரு வாளை வயல்புகா
மகாலய வேறு பலவுமிக மூரி வலியதிரு நாடன் வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

கடலுடைய பூமி முழுதுமொரு நேமி கறுவுபகை தீர நிறுவியே
ககனநெறி யூடு கவரியிரு பாலு மசைய மசையவொரு
கவிகையோ
டடலுடைய தானை யமரர்புடை சூழ வரகமளிர் பாட வவுணர்மே
லடர்விழிய னேக முடையவிடை யூரு மாசன்வழி வீரன்
வருகவே
புடலுடைய வாயில் பயின்மதகு காவ லழகுகுலை வாணர் மறை
போரு
பதபதென மேதி படுகர்விட வாவி படியில் வெடி போய
பருவரான்
மடலுடைய பூக வளமிடறு நூறி வரவுகளு நாடன் வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

விடுவடுவு மீன விசையுமுடி சூடி யாசுதனி யாளு மறுமையோர்
விளைவொழிய வான மழைபொழிய வேத விதிவளரு மாதர்
விலையில்பூ
ணடுநடுவு கூரு மிடரொழிய ஞால மடையவிடர் தீர வருளிஞ
னபயன்மது ரேச னுபயகுல தீப னகிலகலி கோபன் வருகவே
நடுநடுவு நேயர் மகளிரொடு நாள நளினவள வாவி நதிகளா
னலிவுபடு வாளை முதுபகடி ராகு வருவதென வாவு நதியதோர்
மடுநடுவு லாவ வடுநிவு போது மதிவெருவு நாடன் வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

திருடுபொருண் மூகர் பழையமொழி யாளர் வெளிய ரிளநீர
ரிளமையே
திகழு மொழியாத ரிவர்களொரு நால்வர் சிறிது மறியாது பா...
நெருடு வனதீர நிகரில் கவிராச னிலவு கவிமாலை குலவுதோ
ணிருபன் மகன்மோக னடனட விநோத னிருபகுல தீபன்
வருகவே
முருடுபடு மூரி யகிலின் முகிலேறி முரலு முதுநேரி முதுகின்மேன்
முறுகுவன சோதி குறுகுவன கூசி முருகு கமழ்சா
லருகுபோய்
வருடைகுதி பாய நடவுநதி தோறு மதிதிடறு நாடன் வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

குறுகு கழல்வீரர் பொருதுபடு மீழ முடைய வெழுநூறு
மடையமீ
குடறு திரைநீரின் முதியகட லூடு புதிய கடல்காணு மிரவிசூ
டறுகு செறிகோடி யாசர் முடிதோறு மணியு மபிடேக மணியதா
ளபயன் மதுரேச னுபயகுல தீப னனுப மனுலோகன் வருகவே
முறுகுபுனை யேய களரிவிரிகாள... முடியுநிலை பேறு வழுதிபோய்
முதியவரை யேறி யுரிமையுடன் வான முகடுதொடு கோயின்
முழுதுமே
மறுகுபல காண மதுரையெறி சோழன் மதலைகலி கோபன்
வருகவே
மலையமலை வாண னிமயமலை யாளி வளவனக ரீசன் வருகவே.

வேறு.

ஏறுமொரு பன்றியை நகங்கொடு துடக்கிய நிரண்டடி யிரண்டடி
யிடா
வேழையெதி ரிட்டகயன் மீனையு மிடங்கரையு மள்ளிய வெயிற்
றலகுவா
யூறுபட நொந்துபிளி றிக்களி றுகவ்வியு முறுக்கியு முறுக்கியு நிலத்
தூழிபல வந்துபகை மேழியையும் வீணையையு முற்றுமிடை
சுற்று மொருவால்
சீறுமுரு முக்குர லொடுங்க வுலகங்களு நடுங்கவு மிருந்தனது வாய்
சென்றுவட மேருகிரி யிற்சிகர வுச்சியி லிருக்குமிது வென்று
திசையா
மாறுபடு வெங்கலி புலிக்கு வெருவப்புலி புரக்குமுர வோன்
வருகவே
வஞ்சியு முறந்தையு மாந்தையு மகோதையு மளிக்கு மபயன்
வருகவே.

பட்டுத்தரணி பரணிக்கவிதா வொருவிசை பகிரதி நதியளவும்
பலதிசையத்தறி
நட்டுத்தமதி மகிரிகண்டருளிய நரபதிநகர்வாழ் விக்ரமசோழன்
றிருமகனினிதளி
யிட்டுப்பொழி மழையிடப பெயரொருபுடை யதிர்குரலெதிரிட்
டாசிள வெதிரதிர்தலு மிறுவரை
மட்டுத்தடமிடி வடவெற்புடையவன் வருகவே வளவன் பஞ்ச
வனுதியன் செம்பியன் வயவன் குணபரன் வருகவே.

உயிராதியுமெமதுடலாதியு முன்னினமெனன வொளிபெருகுங்
கோவியர் குடையுடை
தயிராசையி னெதிர்தழுவுஞ் சிறுமுகில் வருகவே தண்டா ரகுகுல
தனிநாயகன் மகன் வருகவே.
யயிராபதகிரி யெதிராவாவிட டதனிருடையிலனு மடையத்தன்
படை வயிரத்தோடுனே கவர்ந்தெழ
வயிராபதகிரி முரிவித்தவன்மகன் வருகவே வளவன் பஞ்சவ
னுதியன் செம்பியன் வயவன் குணபரன் வருகவே.

வாரானைப்பருவம் முற்றும்.

தொடரும்.

# பதி பசு பாசப்பனுவல்



## இரண்டாவது
## பதி சாதக வியல்.

திரு. **L.** உலகநாதபிள்ளையவர்கள், நாட்டுமொழிக் கல்லூரி,
திருவையாறு.

(முற்றொடர்ச்சி துணர் ௪, பக்கம் 230.)

*உலக முதித்து நிலைபெற் றொடுங்கு*
*மலமிலனா லென்றே மதி* (க)

*காரியத்தா லிவ்வுலகங் காட்டுமிறை யைக்காந்தம்*
*பாரிரும்பைத் தானியக்கும் பண்பு.* (உ)

*பெண்ணா ணலிமுதலாற் காரியத்தைப் பெற்றியை*
*யெண்ணுவர்தே ராதியுங்கண் டண்டு.* (௩)

*அன்னிய தீவிற...காதியினை யாக்கினரை*
*யுன்னுவர்சா யானியத்தை யோர்ந்து.* (௪)

*கூளியினை மாந்தர் விகாரத்தி னாற்குறிப்பர்*
*கூளிதனை முன்கண்டோர் கூறு.* (௫)

*ஆகஞ் சடங்கா ணணுவறியா திவ்விரண்டின்*
*யோகஞ் சிவனாலென் றோர்.* (௬)

*பிறப்ப னிறப்பன் பிரானல்லன் மாலும்*
*பிறப்பிறப்பில் லானெம் பிரான்.* (௭)

அயனெழுவா யாக்கமலன் சத்திபதிந் தாரும்
வியன்வினையார்க் கும்விமலன் வேந்து (அ)

அனாதியமல னாகா ணவனாதி முத்த
னனாதிய னவத்தையுறு மோர். (கூ)

படைப்புநிலை யீறுதிரோ பாவம் பரிவென்
றடுத்தவைந்துஞ் செய்யுமவ னார்ந்து. (க0)

அருக்கனொளி போலமல னைப்பிரியாச் சத்தி
பெருக்குமுல கைச்சுருக்கும் பின். (கக)

வெண்ணெய் மெழுகுருக்கும் வெய்யிலுலர்த் தும்பசுங்கா
யண்ணலொளிக் கில்லைவிகா ரம். (கஉ)

எல்லா மறியு மிறைவ னவனமல
னெல்லா மியற்றுதலா லே. (கங)

ஆக்கு மறிவுடையா ராகுவரே காரியத்தை
யாக்குவரோ மற்றையராக் கார். (கச)

எல்லா மியற்று மிறைவ னெனிற் சபக்கத்
தில்லையிறை யன்னுவய மென். (கரு)

காட்சி விருத்தமுமுண் டென்னல் கனையிரும...
லாட்சியர்க்கு முண்டறிவெங் ஙன். (கசு)

அமலன் பரமபதி யாக்கை விளைக்க
வவனா லனுகபதி யாம். (கஎ)

ஆக்கையிலை யாக்கையினை யூருமுயிர்க் காக்கையு மற்
றூர்க்குமெலா நின்மலனெம் மான். (கஅ)

ஆதலினா லெல்லா வினைக்கும் பதியமலன்
வாதையிலைக் காண னுவ யத்து. (ககூ)

அன்னுவயத் தாலே யவன்கருத்தா வென்றறிக
பெண்முதலாற் காரியத்தைப் பெற்று. (உ0)

ஆக்கையுமில் லானென் றறிகவெதி ரேகத்தா
ஞேக்கிமல மூலமிலா ...... ல். (உக)

அன்னு வயவெதிரே கத்தா லவனறிவை
யுன்னுகவே துக்கருத்தா வுற்று. (உஉ)

ஆக்கை யுடைய வதிகாரி யர்க்கெல்லா
மாக்கையுமில் லான்பதியா வான். (உரு)

முன்படைப்ப னுக்கையிலான் மூலனுயிர் கட்கவனுற்
பின்படைப்பா ராக்கையும்பெற் ருர். (உச)

தானே யுலகந் தழைத்துற் றெருடுங்குமெனிற்
ருனேதோன் ருதுகடந் தான். (உரு)

அப்புருடன் சன்னிதியிற் ருேன்றி யடங்குமெனி
லப்பலம்வி ஞேகருமத் தாம். (உசு)

வேண்டுவா ரில்லை விலங்கொருவன் காலிலது
பூண்டுநிற்பூண் பித்தானுண்டு. (உஎ)

பூட்டுவித்தான் ருள்பணியப் போம்விலங்கு புன்குரம்பை
கூட்டுவித்தான் ருஃபணிபோங் கூடு. (உஅ)

தருமா தருமஞ் சகத்தினைத் தாராது
தருமா தருமஞ் சடம். (உகூ)

வேலைதரு மோகூலி வேலைவிதங் கண்டிசைந்த
கூலிதரு வான்போலெங் கோ. (௩௦)

கடகாயம் போலுங் கடவுளுட ருேறு
மடாதுபல மென்பதடா தாம். (௩க)

உறுவ னனிமை யொருவ ெனொரு காலத்
துறுவனொரு வன்றுயர்வே ருேர். (௩உ)

நாகசுவர்க் கம்பேத நண்ணுவார் தாமு
மொருவனெலா மென்கையொழி யோர்ந்து. (௩௩)

அமலன் சிவன்சமலர்க் கன்னியநீங் கானாற்
சமலர்க் கனனியந் தான். (௩௪)

உடலொலியின் மூல வொலியுறுதல் போலக்
கடவுளுயி ருள்ளுறையுங் காண். (௩௫)

விண்மண் ணிறுவாய்க்கு நீங்கா வியாபகமே
விண்ணேமண் ணாதி விளம்பு. (௩௬)

அத்துவித மென்றசொ லுக் கொன்றென் றலப்பொருள்வே
றற்றதென வேமலின் றாம். (௩௭)

வேதா கமந்தம்மில் வேறல்ல வேறென்னும்
வாதம் மயலான் வரும். (௩௮)

சத்நிபா தர்க்கமலன் சாற்றினு னாகமநூன்
மற்றையர்க்குக் காண்வேத வாக்கு. (௩௯)

புன்சமய நூலுஞ் சிலாற் புகல்வித்தான்
றன்கருணை யாலமன் றான். (௪0)

ஒற்றைவரி மற்றைவரி யெல்லா மொருவனே
கற்பிக்கக் கண்டேமே காண். (௪௧)

புன்சமயஞ் சொன்ன புலவர் புரத்தடைவர்
தம்பருவ நூலுணர்ந்தார் தாம். (௪௨)

புத்திதத்து வத்தாம் புவனந் தனிற்புகுவார்
புத்தரவர் போகம் புரிந்து. (௪௩)

கண்ணுவரே நையாயி கர்தாமும் புத்திதனிற்
புண்ணியர்துய்ப் பாரதன்போ கம். (௪௪)

அடைவர் குணதத்து வத்தை யருக
ரிடரிலர்துய்ப் பாரின் பிருந்து. (௪௫)

பிரகிருதி யைப்பஞ்ச ராத்திரியார் பெற்றே
யொருவவிடர் வாழ்வாரின் புற்று. (௪௬)

திளைப்பார் புருடதத்து வந்தன்னிற் செல்வங்
களிப்பார்கள் வேதாந்தி கள். (சஎ)

சாங்கியருஞ் சார்ந்துதிளைப் பார்புருட தத்துவத்திற்
பாங்கான போகம் பல. (சஅ)

அற்ற மருமறைக்குங் கூறி லவர்நிரயம்
பற்றிப்பின் றம்பலந்துய்ப் பார். (சகூ)

அமல னுரையது மேற்பிரண வாதி
சமலநுரை தானதனிற் ருழ்வு. (ருo)

அவருரையின் மண்டல ராதியர்சொற் ருழு
மவருரையிற் ருழ்வரிசொல் லாம். (ருக)

அயனமரர் சாகமு லாசனர்சாஞ் சித்த
ரிவருரையு முன்முறையி னெண். (ருஉ)

தோ்க பிரகிருதர் செஞ்சொல்லு முன்முறைபி
ஞேர்கவயி ஞயிகர்சொல் லும். (ருங)

விண்ணுலகந் தங்கி வியப்புடைய நல்வினையான்
மண்ணுலகின் மானிடராய் வந்து. (ருச)

மறவாதார் சாஞ்சித்தி கர்மறந்து பெற்ருர்
பெறுவர் பிராகிருதப் பேர். (ருரு)

ஆய்ந்துவே தாதியெலா மாரியனு லையமுங்
காய்ந்தார் வயினுயி கர். (ருகூ)

ஆக்கையிலான் வாக்குமிலா னுகமத்தை வேதத்தை
யாக்குவனே வாக்கா னெனல். (ருஎ)

ஆக்கையுமற் றைந்தொழிலு மாக்குமுறை முன்னறைந்தா
மாக்குவனு லும்மவைபோ லாங்கு. (ருஅ)

அறிவிப்பன் வேறற் றமலனுயிர்க் கென்னி
லறிவனுயிர்த் துன்புமவ னுங்கு. (ருகூ)

அறியானே யெல்லா மறியானித் தோடம்
பிறியவெனக் குத்தரத்தைப் பேசு. (௬௦)

வினைக்கிசைய வின்பத்துன் பத்தை வினைப்பன்
வினையவனுக் குண்டோ விளம்பு. (௬௧)

காட்டுகின்ற வாமறகுண் டோவுன் கனுபயக்க
மீட்டுனக்கும் பொய்யாய் விடும். (௬௨)

காட்டுவார்க் குண்டோ களிப்பிந் திரசாலத்
தாட்டுவார்க் குந்தோற்கூத் தால். (௬௩)

ஊக மனுபவமென் றோரிரண்டாங் காணுணர்ச்சி
யூக வனுக்குயிர்க்கண் ணுண்டு. (௬௪)

அனுபவந்தன் னனந்த சத்தி யுயிர்கட்
கனுபவந்தஞ் சத்திமல மற்று. (௬௫)

(தொடரும்.)



வினவினான். மகன், "இல்லை; இவை என்ன காரணத்தால் இந்த நிலைமையை அடைந்தன என என்னால் அறியமுடியவில்லை. இவைகளில் ஒன்றுகூட நல்ல நிலையில் இல்லையே!" என மறு மொழி கூறினன். தந்தை, "மகனே! நான் நேற்று ஒரு அழுகிய பழத்தை வாங்கிவந்தேனே. அது உன்னுடைய நினைவில் இருக்கிறதா? அதை நான் என்ன செய்தேன்?" எனக் கேட்டனன். மகன், "தந்தையே! தாங்கள் அதை நான் கொண்டுவந்த மாம்பழங்களுக்கு நடுவே வைத்தீர்களே. அந்த அழுகலைச் சேர்ந்திருந்தமையால் இவையனைத்தும் அழுகிவிட்டனவோ?" என விடைபகர்ந்தான். தந்தை "மகனே! நீ எண்ணுவது மிகவும் உண்மையே. கெட்ட பழம் ஒன்றைச் சேர்ந்தமையால் நல்லவைகளாகிய இவையெல்லாம் கெட்டுப் பயனற்றவைகளாயின. ஒரு குடம் பாலைக் கெடுப்பதற்கு ஒருதுளி நஞ்சைச் சேர்த்தல் போதுமானது. இதைப் போலவே கெட்டவர்களுடைய சேர்க்கையினாலே நல்லவர்களும் கெட்டவர்களாக மாறுகிறார்கள். 'பன்றியுடன் சேர்ந்த கன்றும் மலமுண்ணும்' என்ற பழமொழியை நீ கேட்டிருக்கிறாயல்லவா? பொன்மலையைச் சேர்ந்த காகமும் பொன்னிறமாகத் தோன்றும். பூவுடன் சேர்ந்த நாரும் நறுமணம் கமழும். ஆதலின் நீயும் நல்ல பிள்ளைகளோடு சேர்ந்தால் அவர்களுடைய நல்ல ஒழுக்கங்களைப் பழகிச் சிறந்தவழக்கங்களை அடைவாய். கெட்ட பிள்ளைகளோடு சேர்வாயாயின் கெட்ட நடைகளைப் பழகித் தீயவழக்கங்களைப் பெறுவாய்" என்று அவனுடைய உள்ளத்தில் நன்றாகப் பதியும்படி எடுத்துக்கூறினன். அன்றுதொட்டு அப்பையன் தீயவர் சேர்க்கையை விட்டுவிட்டு நல்லவர் கூட்டுறவால் நல்ல செயல்களைப் பழகி அவைகளைத் தனது வழக்கமாக ஆக்கி நலம் பெற்றான்.

ஒரு புதிய செயல் முதல் நாள் பழகும்போது கடினமாக இருப்பானேன்? அதுவே நாள் ஆகஆக எளிதாவானேன்? இஃது எப்படி என ஆராய்வோம். ஒருவரும் போகாத ஓர் காட்டினுள் புதிதாக நுழைந்து போவதென்பது கடினமே. முதன்முதல் போகும்போது வழியிலுள்ள முட் செடிகளையும், கற்களையும் எடுத்தெறிந்து வழியுண்டாக்கியே போகவேண்டி

யிருக்கிறது. மறுநாள் அவ்வழியே நாம் போவது எளிதாக முடியும். ஏனெனில் முதல் நாளே வழி ஏற்பட்டுவிடுகிறது. மூன்றாம்நாள் போவது அதனினும் எளிதாகமுடியும். ஏனெனில் முதல் நாள் எடுக்கப்பெறுமல் விடுபட்ட கற்களையும் முட்களையும் இரண்டாம் நாள் நாம் எடுத்தெறிந்திருப்போம். இவ்வாருக நாளுக்கு நாள் அவ்வழி மிக எளிதாகப் போகக்கூடியதாகிறது. இதைப்போலவே நமது உடம்பிலுள்ள நரம்புகளும் நரம்பணுக் களும் முதன்முறை ஒருவழியில் பழகினவென்ருல், அவை மறு முறை அவ்வழியிலேயே பழகுவது எளிதாகமுடிகிறது. நாம் ஒரு செயலை அடிக்கடி பழகிவிடுவோமேயானல் அவ்வழியிலேயே நமது மூளையும் நரம்புகளும் பழகித் தழும்பேறிவிடும். அதனை மாற்றி வேறுவகையில் முயலவேண்டுமானல் நாம் நெடுநாள் பிடிவாதத்துடன் முயலவேண்டும். இதனல் முதலிலேயே சிறுவர்களுக்கு நாம் நல்ல வழக்கங்களை ஏற்படுத்தவேண்டும். தீய வழக்கங்கள் மூளையிலுள்ள நரம்பணுக்களில் தழும்பேறு முன்னமே தடுத்து நல்ல வழக்கங்கள் பதியும்படி செய்துவிட்டால் குழந்தைகள் அந் நல்லவழிகளில் எளிதாக நடப்பார்கள். வழக்கங்களை வயதானபின் விட்டுமாற்றுவதென்பது இயலாத செயலாம். ஏனென்ருல் சிறு பருவத்தில் நரம்புகளும் நரம்பணுக் களும் களிமண்போல நினைத்தவாறு உருவமாக்கும்படியான நிலைமையிலிருக்கின்றன. வயது ஆகஆக இவை திடம்பெற்றுச் செங்கல்லைப்போலக் கடினமாகின்றன. அதனல் அவைகளை மாற்றுவதென்பது, கற்றச்சன் கல்லைச் சிற்றுளிகொண்டு செதுக் கித் தான் நினைத்த உருவாக்குவதுபோலாய்விடும். இளமரத்தை வெட்டுவது எளிது. அது வயிரம்பாய்ந்து முதிர்ந்துவிடுமே யாயின் அதை வெட்டுவது அரிதாய்விடும். இளமரத்தைச் சிறு பருவத்தே நகத்தாலும் கிள்ளி எறிந்து விடலாமன்ருே? காகிதத்தையோ அல்லது ஓலையையோ நாம் சுருட்டி வைப்போ மானல் அவைகளுக்கு அச்சுருட்டல் ஏற்பட்டுப் போகிறது. பின் இவைகளை நேராக்குவது கடினமாம். அது போலவே நமது உள்ளத்தை நாம் எந்த வழக்கங்களில் பழக்குகின்ருேமோ அந்த வழக்கங்களிலேயே அது வேரூன்றி நின்றுவிடுகிறது.

நல்ல வழக்கங்களைக் கைக்கொள்ளுவதற்குச் சிறு பிள்ளைப் பருவமே ஏற்றது. 'தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்.' 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?' "இளமையிற் கல்" என்பது ஒளவையார் மொழியன்றோ. மூங்கிலைச் சிறு பருவத்தில் வளைத்தால் அது வளைகிறது. முதிர்ந்த மூங்கிலை வளைத்தால் அது முறிகிறது. ஆதலின் நமது பிள்ளைகளுக்கு நாம் அவர்களுடைய குழந்தைப் பருவத்திலேயே நல்லொழுக்க முறைகளைப் பயிற்ற வேண்டும். நாம் இன்றியமையாது கவனிக்கவேண்டிய வழக்கங்கள் ஐந்து. அவை :—உண்மைபேசல், ஆணைக்கடங்குதல், தன்னை ஆளுதல், ஒழுங்கு, சுருசுருப்பு என்பன.

உண்மை பேசுதல் என்பது நடந்ததை நடந்தவாறு கூறுதல் அதுவே வாய்மையாம். வாய்மையென்பது வாயினுடைய தன்மை. நமது வாய்க்கு இயற்கையான தன்மை உண்மை பேசுதலே. இதன் உண்மையைச் சிறு குழந்தைகளிடத்தில் காணலாம். சிறு குழந்தைகள் நிகழ்ந்தவற்றை நிகழ்ந்தவாறு தான் கூறுவர். அவர்கள் சற்று வளர்ந்து உலகிற் பழகிய பின்னரே பொய்ம்மையைப் பழகிப் பேசுகின்றனர். உண்மை பேசுதலைப்போல நன்மை தருவது பிறிதொன்றும் இல்லை. இதனையே தெய்வப்புலவரும்,

"யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற." என்றருளினர் தமிழ்மறையில். நன்மையே நன்மையை விளைவிக்கும். ஆதலால் நன்மை விளைவிக்கும் சொற்களே வாய்மை யெனப்படும். இதனையே திருவள்ளுவ நாயனாரும்,

"வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்-தீமை இலாத சொலல்" என்றருளினர். அவர் நன்மை விளைக்கும் சொற்களையே பேசவேண்டும் என்ற உண்மையை மேலும் வலியுறுத்தவிரும்பி,

"பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த-நன்மை பயக்கும் எனின்" என்றோதினர். ஆதலின் பிள்ளைகளை எப்போதும் நன்மையை நாடியே பேசப் பழக்குதல் வேண்டும்.

உண்மை பேசுதலைப்போலவே ஆணைக்கடங்கி நடத்தலும் இன்றியமையாதது. "மூத்தோர்சொல் வார்த்தை அமுதம்" என்றபடி பெரியோர் சொல்லும் மொழிகள் என்றும் நன்மையையே தருவன ஆதலால் அவர்களுடைய ஆணைக்கடங்கி நடக்குமாறும் குழந்தைகளைப் பழக்குதல் வேண்டும். பெரியோர்களைக் கண்டால் இருக்கையைவிட்டு எழுதல், எதிர்கொள்ளல் முதலிய நல்ல வழக்கங்களையும் அவர்களிடம் பயிற்றல் வேண்டும்.

நாம் தீமையான வழிகளில் நடப்பதைக் கண்டால் பெரியோர் நம்மைக் கண்டித்து நல்லவழிகளில் நம்மைச் செலுத்துவார்கள். அதைப்போலவே பிழையான வழிகளில் நடக்கும்படி உள்ளம் தன்னைத் தூண்டுங் காலத்திலெல்லாம் தன்னைத்தானே கண்டித்துத் தியவழிகளிற் செல்லாமல் நல்லறிவினால் ஆராய்ந்து நல்ல வழிகளில் நடத்தலே தன்னை ஆளுதலாம். ஒவ்வொருவர் உள்ளத்திலும் உளச்சான்று என்பது அமைந்திருக்கிறது. அச் சான்று கூறும் வழிகளிற் செல்லுதலே தன்னை ஆளுதலாம். சிறுவர்களுக்கு நாம் இச்சான்றினை அடிக்கடி எடுத்துக்காட்டுவோமானால் அவர்கள் அதனை அறிந்து தம்மைத் தாமே ஆண்டு நலம் பெறுவர்.

எந்தெந்தச் செயலை எந்தெந்த நேரத்திற் செய்யவேண்டுமோ அந்தந்தச் செயலை அந்தந்த நேரத்தில் தவறாமல் செய்யப் பழக வேண்டும். இதுதான் ஒழுங்கு என்பது. மேலும், மேலோர் விதித்துள்ள ஒழுங்கான வழிகளில் கட்டுப்பட்டு நடத்தலும் ஒழுங்கேயாம். ஒழுங்கான முறைகளைக் கைக்கொள்ளுதலைப் போலவே சுறுசுறுப்பும் இன்றியமையாதது. "சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்" ஆதலின் எல்லோரும் சோம்பலை விடுத்து விடாமுயற்சியைக் கைக்கொள்ளுதல் வேண்டும்.

"உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே".

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்".

மேலேகூறிய தலை சிறந்த நல்ல வழக்கங்களை, 'சேரிடம் அறிந்து சேர்' 'இணக்கம் அறிந்து இணங்கு' என்ற முது மொழிகளின்படி நல்லோருடைய இணக்கத்தால் பழகிக் கைக் கொள்ளும் குழந்தைகள் ஒப்புயர்வற்ற புகழையும் பொருளையும் படைத்துப் பெருவாழ்வடைவர் என்பதற்கு ஐயமும் உளதாமோ?

(முற்றும்.)



# உடல் இயலும் உடல் நல வழியும்.

திரு சர்மி. வேலாயுதம் பிள்ளையவர்கள், B.A., L.T.,
உரத்தநாடு.

(முற்றொடர்ச்சி 381.)

## VI. செரிமான உறுப்புகளும் அவைகளின் வேலைகளும்.

உணவின் வாயில் :—உணவுப் பொருள்களைக் காணும் பொழுதும் முகரும் பொழுதும் கண்ணும் மூக்கும் அவை உண்பதற்குத் தக்கன வென்று மூளைக்குத் தெரிவிக்கின்றன. உடனே அது வாயை ஊறும்படி செய்கிறது. அவ்வுணவுப் பொருள் கைக்குக் கிட்டினால் அதை எடுத்து அது வாய்க்குக் கொடுக்கிறது. இவ்வாய்தான் முதல் சமிக்குமுறுப்பு. இதில் உள்ள வெட்டக் கூடிய முன்பற்கள் அவ்வுணவில் வேண்டிய அளவுள்ள ஓர் துண்டைக் கடித்துக் கொடுக்கின்றன. உடனே நாக்கு அதைக்

கடைவாய்க்குத் தள்ளுகிறது. தள்ளும்பொழுதே ஊறுகிற எச்சிலின் உதவியால் *சுவைத்துப் பார்க்கிறது. சுவை பிடிக்காவிடில் துப்பிவிடுகிறோம். ஒருசொட்டு அல்லது கடுகளவு உண்டால் கொல்லக்கூடிய பொருள்கள் பல உள. அவைகள் பெரும்பாலும் வெறுக்கத்தக்க சுவையுடையனவாதலின் நாவின் உதவியால் அவை நீக்கப்பெறுகின்றன. சுவை பிடித்திருந்தால் விருப்புடன் மெல்லுகிறோம். மெல்லும்பொழுது துண்டுபடும் பொருளை நாவானது கடைவாய்ப் பற்களுக்குத் தள்ளிக்கொடுத்து அரைக்கவைக்கிறது. அரைபடும்பொழுது அதைக் கூழ்போலாக்கற்கு வேண்டிய எச்சில் ஊறிக்கொண்டேயிருக்கிறது.

எச்சிலின் பெருமை:—இவ்வெச்சில் நம்வாயில் வற்றாத பொய்கைபோல் ஊறிக்கொண்டேயிருக்கிறதல்லவா? இது எங்கிருந்து வருகிறதென்று வினவுவீர்கள்! ஆறு எச்சிற்பைகள் (Salivary glands) காதோரமாய்க் கன்னங்கள், தாடையின் கீழ்முடக்குகள், நாக்கடி ஆகிய இம்மூன்றிடங்களில் இரட்டை இரட்டையாக இருந்துகொண்டு குருதியிலிருந்து எச்சிலை உண்டாக்குகின்றன. இப்பைகளுள் ஒவ்வொன்றும் ஓவ்வொரு குழாய்வழியே எச்சிலை வாய்க் கனுப்புகின்றது. நாம் உண்ணும் உணவைக் கரைப்பதற்கு உடல் உண்டாக்கிக்கொள்ளும் நீர்களில் இதுவே முதலாவதாகும். இதில் நீரிற்கரையாத மாப்பொருளைக் கரைக்கும் ஒருகாடிப்பொருள் (Ferment) இருக்கிறது. இக்காடிப்பொருள் இம்மாப்பொருளை நீரிற்கரையுஞ் சர்க்கரையாக்கி விடுகிறது. நீங்கள் அரிசியை நன்றாய் மெல்லுவீர்களாயின் ஓர் இனிப்புண்டாகிறதல்லவா? அது மாப்பொருள் சர்க்கரையாவதினாற்றான்! இக்காடிப் பொருளன்றி எச்சிலில் சளியும், காற்றுக் குமிழ்களும் (Bubbles) கலந்திருக்கின்றன. நீங்கள் எச்சில் உமிழ்ந்தால் கம்பிபோல் நீண்டுவிழுகின்றதன்றோ? இது சளியினாற்றான். இச்சளியால் என்ன நன்மையென்று வினவலாம். மென்று விழுங்கப்பெறும் உணவுப்பொருள்கள் சிறுசிறு துண்டு

* எப்பொருளும் நீர்ப்பொருளாக மாறி நாக்கின்மேற் சுவைக்கப்பெறும். ஆதலின் கட்டிப்பொருள்கள் எச்சிலின்றேல் சுவைக்கப்பெறாவென்பது விளங்கும்.

களாய்க் குால்வளையுள் விழுந்துவிடாதபடி இச்சளி அதைச்சுற்றி மூடிப் பந்துபோலாக்கிவிடுகிறது. இதுவன்றி நாம் பேசும் பொழுதும் மெல்லும் பொழுதும் நாக்கும் உதடும் எளிதில் நகரும்படி வழவழப்புண்டாக்குகிறது. நம் எச்சிலில் பலப்பல காற்றுக் குமிழ்களிருப்பதை எச்சிலைத் துப்பிப்பார்த்தால் அறியலாம். இவை பல நச்சுப்பொருள்களையும், உணவுப்பொருள்களையும் இதிலுள்ள உயிர்க்காற்றுடன் கலக்கச்செய்து மாற்றிவிடுகின்றன. இத்துணை அருஞ்செயல் வாய்ந்த எச்சில் வேண்டிய அளவுப்படி உண்டாகவுங் கற்றுக்கொண்டிருக்கிறது. நீர்ப்பொருளை உண்ணும்பொழுது இது உண்டாகும் அளவைவிடக் கட்டிப்பொருளை உண்ணும்பொழுது நான்குபங்கு மிகுதியாயுண்டாகிறது. பயம் உள்ளபொழுது இது உண்டாவதில்லை. ஆதலின் உண்ணும் பொழுது உள்ளக்கிளர்ச்சியுடன் உண்ணல்வேண்டும். வெறு வாயை மெல்லல் கூடாது. அது பார்ப்பவர்களுக்கு வெறுப்பை யுண்டாக்குவதன்றி எச்சிலை வீணாக்கி, தீனிப்பையை வேகச் செய்து, எச்சிற்பைகளையும் ஓயா உழைப்பால் நலியச்செய்கிறது. இக்கடைக்கெடுதல் ஓயாது எச்சில் துப்பிக்கொண்டிருப்பவர்களுக்கும் உண்டு. இதைப் பெரும்பாலும் சுருட்டுப்பிடிப்பவர், புகையிலை, பாக்குவெற்றிலை போடுபவர், மகம்மதியர் முதலியோர் நன்குணரவேண்டும்.

உண்ணத் தெரியாதவர் :—இன்னார், கோழி தவிட்டை விழுங்குவதுபோல் இரண்டொரு துடி நேரத்தில் உணவை யெல்லாம் விழுங்கிவிடுகின்றனர். இவர் பொழுது முழுவதையும் வீண் பேச்சிலும், வீண் வேலைகளிலும், தூங்குவதிலுங் கழித்தாலுங் கழிப்பார்களேயன்றி ஒழுங்காயமர்ந்து மெதுவாய், நன்றாய் மென்று சுவைத்து விழுங்குவதிற் கழிக்கமாட்டார்கள். என்ன மதியின்மை! என்ன கொடுத்து வைக்காமை!!! இன்னார் இழக்கின்ற பெரு நன்மைகளாவன:—(1) நன்றாய் மெல்ல நல்ல சுவை யுண்டாதலின் நாக்கும் உடலும் இன்பமடைகின்றன. இனிமையான உணவை மிகுதியாக உண்டு பலர் உடலைக் கெடுத்துக் கொள்கின்றனர். இன்னார் உணவால் அடையும் இன்பம் உணவின் அளவைப் பொறுத்திருக்கிறதென்று தவறாக நினைக்

கின்றனர். உண்மையில் உணவு வாயில் எத்துணை நேரம் மென்று சப்பப்படுகிறதோ அத்துணை இன்பமுண்டே யன்றி மிகுதியாக உண்ண உண்ணச் சுவையுஞ் சிறிது, உடல் நலிவும் பெரிதே யாகு மென்பதை உணரவேண்டும். (2) மீதூண் விரும்பாதிருக்க நன்றாய் மென்றுண்பதே நல்ல வழியாம். ஏனெனில் சுவைத்துச் சுவைத்து விழுங்குவதால் வேண்டிய அளவு தின்றவுடன் தெவிட்டிவிடும். இத் தெவிட்டல் விழுங்குவோர்க்குச் சரியான சமயத்தில் உண்டாகாது. இதுமட்டுமன்றி உடற்கு வேண்டிய உணவின் வகையும் நன்றாய் மென்றுண்போர்க்குத் தெரியும். எவ்வாறெனின் வேண்டா உணவு விரும்பப்படாது. (3) நன்றாய் மென்றுண்பதால் உணவின்சத்து எளிதில் உடலுட் சேருகிறது. மூன்று பங்கு உண்பதால் விழுங்குவோ னடையுஞ் சத்தை இரண்டு பங்கு உண்பதால் மென்றுண்போ னடைகிறானாதலின் இது ஊதியந் தரும் வழியே யாகும். (4) நன்றாய் மென்றுண்பதால் உடற்கு வலிவு, பொறுக்குந் தன்மை (Endurance), நலம், உண்டாவதன்றி உள்ளத்திற்கும் தன்னைத் தானே அடக்கிக் கொள்ளும் வன்மையும் (Selfcontrol) உண்டாகிறது.* (5) பற்களுக்குத் தகுந்த பயிற்சி யுண்டாவதால் அவை உறுதி யடைந்து முதுமையிலும் விழாதிருக்கின்றன. பல்விழுந்தோர்க்கு மெல்ல முடியாதாகையின் அன்னார் இத்தகைய நலங்கள் யாவற்றையும் ஒருங்கே யிழப்பரன்றோ? (6) நன்றாய் மென்றுண்ணப்படாத உணவைச் சமிக்கக் குடல் வருந்தி உழைக்க வேண்டியதா யிருப்பதால் வயிற்றுவலி யுண்டாகிறது.

மென்றுண் பழக்கம்:—இவ்வாறு மென்றுண்பதால் பல்வகைப் பயனடைய விருக்க அதை வறுமையைத் தருவது (தரித்திரம்) என்று சிலமூடர்கள் கூறுவதுமதியீனம். 'நொறுங்கத் தின்றால் நூறுவயது' என்னும் பழமொழியே நம்முன்னோர் இப் பழக்கத்தைப் போற்றி வந்தனர் என்பதற்குத் தக்க சான்றாம்.

* நன்றாய் மென்றுண்ணும் பழக்கம் உண்டாவதற்கே தன்னடக்கம் வேண்டுமாதலின் இப்பழக்கம் உண்டாக இவ்வடக்கமும் உண்டாகிறது. இதுவன்றி உடல் நலமும் பொறுக்குஞ் சத்தியும் உண்டாக உண்டாக உள்ளமும் இவ்வன்மை யடைகிறது.

இவ்வாறு மென்றுண்பதால் பெருமை யுற்றோர் பலருள்ளும் கிளாட்ஸ்டோன் (Gladstone) என்னும் ஆங்கில அமைச்சர் சிறந்தோராவர். இன்னார் இவ்வரிய தன்மையாலும், விடா உடற் பயிற்சியாலும் 80 ஆண்டு உடல், உள்ள வலிவுடன் விளங்கிய தன்றி உலகமுழுவதும் உயர்ந்தோரென்று கருதும் ஒப்பற்ற பெருமை யடைந்தார். அன்னார் உண்ணும் ஒவ்வொரு பிடியையும் ஒவ்வொரு பல்லுக்கும் ஒவ்வொரு முறையாக 32 முறை மென்று கூழாக்கிச் சப்பி விழுங்குவது வழக்கம். இதைப் படிக்கும் ஒவ்வொருவரும் அவரைப் பின்பற்ற முயலவேண்டும். ஆனால் படிப்புப் பிடிவாதம் (புராண வைராக்யம்) என்பதற் கிணங்கச் சின்னாளில் மறந்து 'பழய குருடி'யாய் விடுவது கூடாது. அவ்வாறிலாது இதை உடலுள்ளளவும் நீடித்து நிற்கும் பழக்க மாக்கிக் கொள்வோரே உயர்ந்தோராவர். இப்பழக்க முண் டாக்கிக் கொள்ள ஓர் சிறந்த கட்டுப்பாடு யாதெனின் உண்ணும் போது கையை எவ்வளவு குறைவாய் இயக்கக்கூடுமோ அவ்வளவு குறைவாய் இயக்குவதாம். இதனால் வாய் மெல்லுவதற்கு வேண் டிய பொழுது (சாவகாசம்) கிடைக்கிறது. இவ்வாறு சிலநாட் கள் விடாது பழகினல் பிறகு இப்பழக்கம் நம் உடலை ஒட்டியதாய் விடுகிறது. சூடு, குளிர், உரைப்பு, புளிப்பு, உப்பு மிகுந்திருக் கின்ற உணவுப்பொருள்களும் நாவிற் கின்பந்தரா வாதலின் விரை வில் விழுங்கப்பெறும். இவை அளவோடுகூடி நாவிற் கின்பமா யிருக்கும் பொருளையே உண்ணின் நன்றாய் மென்றுண்ண ஊக்கந்தரும்.

பற்களின் வகை தொகை:—இவ்வாறு மென்றுண்ணும் பழக்கத்திற்குப் பற்கள் எவ்வளவு இன்றியமையாதன பாருங்கள்! இப்பற்களை நாம் பிறக்கும் பொழுது கொடுவந்ததில்லை! என்? அப்பொழுது நீர்ப்பொருளாகிய பாலையே சாப்பிட்டுக்கொண் டிருக்கிறோமாதலின் அவை தேவையில்லை. பிறந்த ஆறு எழு மாதங்களில் இவை முளைக்கத் தொடங்குகின்றன. இரண்டு ஆண்டிற்கெல்லாம் 20 பல் முளைக்க, முளைத்தல் முற்றுப்பெறு கிறது. இவற்றிற்குப் பாற்பற்கள் (Milk Teeth) என்று பெயர்.

பின்னர் ஆண்டாகஆக வாய் பெரிதாகிறது. அதற்குத் தக்க வாறு பற்களும் பெருப்பதில்லையாதலின் ஐந்தாறு வயதிற்கெல் லாம் நிலையான பற்கள் (Permanent Teeth) முளைக்கத்தொடங்கி ஒவ்வொன்றாகப் பாற்பற்களை விழச்செய்து அவற்றினிடத்தில் முளைக்கின்றன. இவ்விரண்டாம் முளைத்தல் முடிய 12, 13 ஆண் டாகிறது. இதன் தொகை 28 ஆகும். பின் 20 முதல் 25 ஆண்டிற்குள் நான்கு பற்கள் முளைக்கின்றன. இவை அறிவு முதிர்ந்தபின் உண்டாவதால் அறிவுப் பற்கள் (Wisdom Teeth) என்னும் பெயருடையன. பற்கள் மேல்வாய், கீழ்வாய் ஆகிய ஈரிடங்களில் இருவரிசையாக முளைக்கின்றன. ஒவ்வொரு வரிசை யிலும் வலதுபக்கம், இடதுபக்கம் ஆக இருபக்கங்களிருக்கின்றன. பற்கள் நடுவிலிருந்து வலப்பக்கம் எவ்வாறு அமைக்கப்பட்டிருக் கிறதோ அவ்வாறே இடப்பக்கமும்; மேல்வாயில் எவ்வாறு அமைக்கப் பட்டிருக்கின்றனவோ அவ்வாறே கீழ்வாயிலும் அமைந்திருக்கின்றன. பாற்பற்களில் ஒவ்வொரு பக்கத்திலும் இரண்டு வெட்டிகளும் (Incisors), ஒரு கூர்ம்பல்லும், (Canine Teeth) இரண்டு அரைவைகளும் (Molar Teeth) ஆக ஐந்து விழுக்காடு நான்கு பக்கங்களிலும் 20 இருக்கின்றன. பின்னர் நிலைத்தபற்கள் முளைக்கும்போது இவ்வரிசை ஒன்றிற்குள்ள ஐந் துடன், பக்கத்திற்கிரண்டு அரைவைப் பற்கள்கூட முளைக்கின்றன வாதலின் பக்கத்திற்கேழாகி மொத்தத்தில் 28 ஆகின்றன. இதன்பின்னர் அறிவுப்பற்கள் முளைக்கும்போது பக்கத்திற்கொரு அரைவைப்பல்கூட முளைத்து மொத்தம் 32 ஆகின்றன.

பற்களின் அமைப்பும் பிடிப்பும் :—பற்களின் பெரும்பங்கு தாடையிலுள்ள ஆழ்ந்த எலும்புப்பள்ளத்துள் புதைந்து கிடக் கின்றது. இப்பங்கிற்கே வேர் (Root) என்று பெயர். இப் பள்ளத்தின் பரப்பு முழுவதும் ஒருவித வேர்த்தோல் (Root membrane) படர்ந்திருக்கிறது. இத்தோலையும் பல்லையும் பிணைப் பது ஓர்வித பசை (Cement). பள்ளத்தையுடைய எலும்பை யும் பல்லின் வேருக்குமேலுள்ள ஒரு சிறு பங்கையும் மூடியிருப் பது ஈறு (Gum) ஆகும். இவ்வீறினால் மூடுபட்ட பல்லின் பங்கிற்குக் கழுத்து என்று பெயர். அதன்மேலுள்ள தெரியும்

பங்கிற்குத் தலை (Crown) யென்று பெயர். (படத்தைப் பார்க்க). இத்தலையின் வெளிப்புறத்திருப்பதே மிக அழுத்தமும் பளபளப்புமுள்ள சிப்பி (Enamel). இது ஈறுக்குள்ளும் எலும்பிற்குள்ளும் இல்லை. இது மிகச் சிறிதே ஈறுக்குட் சென்று ஆங்குப் பசையால் மூடப்பெறுகிறது. இதனுள் எலும்புப்பள்ளம் நிறையப் பொதிந்திருப்பது பல்லின் பெரும்பங்காகிய பல்லெலும்பு (Dentine). இதன் நடுவில் ஓர் தசைவளை (Pulp cavity) உண்டு. இதனுள் பிணையற்றசைநார்களும் (Connective Tiscues), நரம்புகளும், குருதிக்குழாய்களுமிருக்கின்றன.

பற்களின் நலவழி :—(1) பல்லின் நலம் உடலிற் சமித்தல் நன்ருய் நடத்தலைப் பொறுத்திருக்கிறது. சமித்தல் குன்றின் உடல் நலங்குன்றும். பல்லின் நலமும் உடன் குன்றும். (2) பற்கள் கெட்டிப் பொருள்களை மெல்வதால் தாம் தக்க பயிற்சியடைந்து, தமக்கு வருங் குருதி மிகுந்து வலிவடைகின்றன. பற்களின் வேலை குறையக் குறைய அவற்றின் வலிமை குன்றி விழுந்து விடும். ஏனெனில் பயனற்ற உறுப்புக்கள் நீக்கப்படுதலே இயற்கையின் வழக்கமாயிருக்கிறது. ஆகலின் ரொட்டியை உண்ணும்போது சிலர் கெட்டிப் பங்கைத் தள்ளிவிட்டு உள்ளேயுள்ள மெதுவான பங்கைத் தின்பது மிகக் கொடிய பழக்கமாகும். பற்களின் பயிற்சியைக் கருதிக் கெட்டிப்பங்கையே தின்னவேண்டும். (3) பற்கள் நாள்தோறும் விளக்கப்பட்டு ஊத்தை (Tartar) நீக்கப் பெறவேண்டும். இப்பழக்கத்தைக் காலைக் கடனுள் முதன்மையாகக் கொண்ட நம் நாட்டினர்க்குப் பல் நோய் மிகக் குறைவே. இப் பழக்கத்தை மேற்கொள்ளாத மேனாட்டார்க்கு இந்நோய் மிகுதியேயாம் *. இவ்வாறு விளக்குதற்குப் பல் துடைப்பத்தினும் (Tooth Brush) ஆலும் வேலும் மிகச் சிறந்தன. இவை அத் துடைப்பங்களினும் மெதுவாயிருப்பதன்றி காரத்தன்மை (Alkaline) யுடைய சாற்றை

* மேனாட்டு முறைகளே சிறந்தனவென்னும் பித்துப்பிடித்த மாந்தர் சிலர் இக்கடனைக் கழிக்காது வருந்துவர். என்னே இவர் மதியின் றன்மை !

உண்டாக்கிப் பற்களுக்கு உரந்தந்து வாயிலுள்ள நச்சுக் கூடுகளை நசிக்கவும் செய்கின்றன. இவையல்லாது இக் குச்சிகளை நையக் கடிப்பதால் பற்களுக் குண்டாகும் பயிற்சி சிறந்ததொரு நன்மை* தரும். இந் நன்மை கெட்டிப் பொருள்களை மிகுதியாக மென்றுண்ணுதலூ னுண்ணார்க்கு (Vegetarions) இன்றியமையாததொன்றே. (4) மிகச் சூடு அல்லது குளிர் உடைய பொருள்களை உண்பதால் சிப்பி வெடித்துப்போகுமாதலின் பொறுக்குஞ் சூடு குளிருடைய பொருள்களைத்தான் உண்ணல் வேண்டும். (5) பல்லிடுக்குகளில் அகப்பட்டுக்கொள்ளும் உணவுத் துண்டுகளை மெதுவாய் நீக்கி விடல் வேண்டும். இல்லாவிடின் அவை அழுக நச்சுக்கூடுகளுண்டாய்ப் பல்லைக் கெடுத்துவிடும் (6) புளிப்பேறிய பாலிலுள்ள பாற்புளிப்பு (Loctic Acid) பல்லிலுள்ள விளை சுண்ணாம்பைத் (Chalk) தின்றுவிடுகிறதால் அதன் வலிவிழந்து பல் கெடுகின்றது. (7) அக் காரப் பொருள்களைத் தின்றதும் மிகக் கவலையுடன் வாயைக் கொப்பளித்துக் கழுவல் வேண்டும். இன்றேல் சர்க்கரையின் ஒரு நுண்டுள் (Molecule) இரு பாற்புளிப்பு நுண்டுள்களாக ஆக்கப்பெற்றுச் சிப்பி கரைபெறும். (8) நல்ல ஊட்டம் பெறாத குழந்தைகளின் சிப்பி வலிவற்றதாய் விடுமாதலின் நன்றாய் ஊட்டங் கொடுத்து வளர்க்கவேண்டும். இன்னும் பாற்பற்கள் சிறிது காலத்தில் விழுந்துவிடுமே யென்று அவை போற்றப் பெறாதிருத்தல் தீதே. ஏனெனின் பின் வளரும் நிலைப்பற்களின் தன்மை இப்பாற்பற்களின் நலத்தைப் பொறுத்தே யிருக்கிறதாகும். (9) பச்சைவெட்டு மருந்துகள் 'ரஸபஸ்பம்' (calmel) பற்களை உதிர்த்துவிடுமாதலின் தக்க மருத்துவன் மருந்தையே உண்ணவேண்டும்.

பல்வலி:—இத்தகைய நலவழிகளைப் பின்பற்றாததால் பல நச்சுக் கூடுகளுண்டாய், அவை பற்களின் கழுத்துப் புறமாய்த் துவங்கிப் பல்லெலும்பை அரித்துக்கொண்டே செல்கின்றன.

---

* இந்நன்மையை உணர்ந்தே 16 விரற்கிடை நீண்ட குச்சி ஒடித்து எட்டுவிரற்கிடை தேய்க்கவேண்டுமென்று நம் அறிவுநூற்கள் விதிக்கின்றன.

இவ் வெலும்புகளில் நரம்புகளில்லையாதலின் இது நம்முணர்ச்சிக்கு வாரது. ஆனால் இந்நச்சுக்கூடுகள் பல் வளையிலுள்ள தசைநார் முதலியவற்றை அரிக்க முன்வந்ததும் ஆங்குள்ள நரம்புகளின் உதவியால் வலி தெரிகிறது. உடனே நாம் பல் எவ்வளவு கெடக் கூடுமோ அவ்வளவுங் கெட்டுவிட்ட தென்றுணர்ந்து விரைவில் பல் மருத்துவனிடஞ்சென்று நோயை நீக்கிக்கொள்ளல் வேண்டும். பல்லைப் பிடுங்கிவிடுதல் மிகக் கெடுதி. ஏனெனில் பல்லில்லாததால் உணவை மெல்லாது விழுங்க நேரிடும். செயற்கைப் பல் (Artificial Teeth) கட்டிக்கொள்ளலாமே யெனின் அவை இயற்கைப் பற்களின் வேலையில் மூன்றிலொருபங்குகூடச்செய்யுந் திறனுடைய வலவென்று ஆராய்ந் தறிந்திருக்கிறார்கள். ஆதலின் தக்க மருத்துவன் இயற்கைப் பல் எக்கேடு கெட்டிருந்தாலும் பிடுங்காது காப்பாற்றிவிடுந் திறனுடையோனாதலின் அவனைத் தேர்ந்து நாடல் வேண்டும்.

உணவுக் குழாய் :—இவ்வாறு காப்பாற்றப் பெறுகிற பற்கள் மென்ற உணவு, நாக்கின் பின்புறத்திற்குத் தள்ளப் படுகிறது. உடனே மூளை வேலை செய்வதால் குரல்வளை மூடப் படுகிறது. மெதுவண்ணம் (Soft Palate) உயர்த்தப்பட்டுத் தொண்டையின் மேற்புறம் மூடப்படுகிறது ; தொண்டையின் தசைச் சுவர்கள் சுருங்குகின்றன இவ் வேலைகளால் உணவு உணவுக்குழாய்க்குள் (Gullet) தள்ளப்படுகிறது. இது ஒன்ப தங்குல நீளமுடையதாய் மூள்ளந் தண்டிற்கு முன்னும் மூச்சுக் குழாய்க்குப் பின்னும் உள்ளது. இது வாயையுந் தீனிப் பையையுஞ் சேர்க்கிறது. இது நாம் உண்ணும் பொழுதெல்லாம் திறந்தே யிருக்கிறது. இதன் உட்புறமாகிய உணவு செல்லும் வழி முழுவதும் சளித்தோலால் மூடப் பெற்றிருக்கிறது. இதன் சுவர்கள் இரண்டு படைத் தசைகளாலாயின. இதில் ஒன்று நீள வசமும் மற்றையது வட்ட வசமு முடையன. இக் குழாய் வழியே உணவு தன்னிறையால் விழுந்து விடுவதில்லை *. ஆனால்

* உண்மையாக உடலில் கூடானபங்கு ஒன்றுமிலது. உடலிலுள்ள எல்லாக் குழாய்களும், பைகளும் வேண்டும்போது விரிந்து இடங் கொடுத்துக்கொண்டும், மற்றைய பொழுதில் மூடித் தட்டையாய்க் கொண்டுமே இருக்கின்றன.

இக் குழாயின் மேற் புறத்திற்கு உணவு வந்ததும் உணவிருக்கு மிடத்தின் கீழ்ப்பங்கிலுள்ள வட்டப்படை விரிந்துகொடுப்பதாலும், உணவின் பக்கத்தும் சிறிது மேலுமுள்ள வட்டப்படை இறுகி நெருக்குவதாலும் அது கீழ்த்தள்ளப்படுகிறது. இவ்வாறே ஆங்காங்கு கீழ்த் தள்ளப்பட்டுத் தீனிப்பையை அடைகிறது. இவ்வாறு இக் குழாய்வழியே உணவு செல்வதைக் குதிரை நீருண்கையில், நீர் அலைபோற் செல்வதை அதன் கழுத்திற் காணலாம். இத்தகைய திறமை இக் குழாய்க் கிருப்பதாற்றான் சில கழைக் கூத்தாடிகள் தலைகீழாக நின்றும் உண்ணுகின்றனர். இப்படி விழுங்கப்பட்ட உணவு தீனிப்பைக்குப் பிடிக்காததாயிருப்பினும், அளவிற்கு மிஞ்சியதாயிருப்பினும் அது வெளியிற் றள்ளப்படுவதால் முறையே கக்குதல் அல்லது எதிர்க்கழித்தல் நடக்கிறது. இவ்வாறு நடக்கும்பொழுதும் இவ்வுணவுக்குழாய் முன் விழுங்கும்பொழுது உணவை எவ்வாறு கீழ்த் தள்ளிற்றோ அவ்வாறே இப்பொழுது மேற்றள்ளுகிறது.

(தொடரும்.)



# மூவர் தமிழ்.

## (ஆராய்ச்சி)

## II தமிழ் மறை.

திரு. சாமி. வேலாயுதம் பிள்ளையவர்கள், B.A., L.T.,
உரத்தநாடு.

வேதமென்னுஞ் சொல் 'வித்' (புலப்படல்) என்னு மடியாகப் பிறந்ததோர் வடசொல்லாகும். இச்சொல் இதுபோது வழக்கிலிருக்கும் இருக்கு, யசுர், சாமம், அதர்வணமாகிய நான்கையுமே குறிக்கு மென்பர் சிலர். எனினும், இதன் பொருட் குறிப்பைப் பலதிறப்பட ஆராய்வாம்.

இறைவனே 'நாதவிந்து கலைக்கு ஆதி'1 யாகலின், அவன் 'வேதம் முதல்வன்'2, 'வேத மொழியர்'3, 'வேதப் பொற் கோவண ஆடையர்'4 என்று அழைக்கப்படும் பொழுதெல்லாம் நாதவிந்துக்களுக்கு முதல்வனாக அமைந்தும், அவைகளைத் தனது மொழியாகவும், ஆடையாகவும் அமைத்தும் உளன் என்று இச்சொற்றொடர்கள் குறிப்பதாகக்கொளல் மிகையாது. ஆகலின் ஈண்டு வேதமென்னுஞ்சொல் நாதவிந்துகளையுங் குறிக்குமெனல் தெள்ளிதே.

இவ்வாறே "மந்திர வேதங்களோதுநாவர்"5 என்றவிடத்தும் மந்திரவியலுடைய வாக்கியங்களை இச்சொல் குறிக்கிறது.

---

1 திருப்புகழ்—நாதவிந்துகலாதீ நமோநம.

2 திருஞானசம்பந்தர்—திருவாலவாய்-திருப்பாசுரம் (8)

3 திருவாசகம்—அன்னைப்பத்து (1)

4 திருப்புகழ்—திருப்பழயாறை.

5 திருஞானசம்பந்தர்—நட்டபாடை—திருமருகலுஞ் செங்காட்டங்குடியும் (9)

மூன்றாவதாக "வேதநூல் பயில்கின்றது வாயிலே"1, "வேத அரும்பொருள் நூல்கள்"2 என்புழி வேதமென்னுஞ் சொல் ஒருவகையவான நூல்களைக் குறிக்கின்றது. இவ்வாறு பொருள்படும் பொழுது இருவகையாகவு மியம்பப்படுகின்றது. 'அளவரிய வேதத்தான்'3, 'நாநா வேதப்பொருள்'4, 'அபரிமித சுருதி'5, 'பலவேதம்'6, 'முடிவில்லா வேதத்தான்'7, என்புழி வேதம் எண்ணிறந்தனவாகவும்; "நால்வேதஞ் சொல்லார் கேண்மையார்"8, "ஆறுநான்குஞ் சொன்னாுமையானுடையையனே"9, "ஓர்நால் வேதஞ் சொலச்சங்கையிலாதீர்"10, என்புழி வேதம் நான்காகவுங் குறிக்கப்படுகின்றது. இவற்றின் உட்கருத்தை யுற்றுநோக்கின் இச்சொல் பலவற்றைக் குறிக்கும்பொழுது அறிவுநூற்கள் பலவாதலையும், அவற்றைப் பாகுபாடு படுத்தும் பொழுது "அறம், பொருள், இன்பம், வீடு, ஆறங்க வேதந்தெரித்தானை"11, என்றபடி நாற்பொருளை விளக்கும் நூற்களாதலையுங் குறிப்பதாகக் கொள்ளல் கூடும். இதற்கிசையவே "நாலங்கவேதத்தின் பொருளானே"12, என்புழி அறமாதி நான்கங்கங்களையுடைய வேதங் கொள்ளப்படுகிறது. இவ்வாறு நாற்பொருள் நூற்களை இச்சொல் குறிக்கும் பொழுது இருக்காதி நால்வேதமன்றி நாற்பொருளை விளக்கும் ஆகம புராண இதிகாசங்களையும் குறித்தல் வேண்டுமன்றோ? இதற்கிசையவே காசிவாசி செந்திநாதையரியற்றிய 'தேவாரம் வேத

1 ஷை —திருவாலவாய்-திருவியமகம் (2)
2 திருவாய்மொழி—க-பத்து, ரு-வது ஓராயிரமாய் (ரு)
3 பூதத்தாழ்வார்—இரண்டாந்திருவந்தாதி (45)
4 திருப்புகழ்—பொதுப்பாடல்கள்-ஊனேதானாய் (1031)
5 ஷை ஷை அகரமுதலென (1053)
6 திருஞானசம்பந்தர்—திருச்சண்பைநகர்—தக்கேசி (1)
7 திருவாசகம்—திருவேசறவு (8)
8 திருஞானசம்பந்தர்—சீர்காழி-குறிஞ்சி (1)
9 ஷை திருவையாறு-இந்தளம் (3)
10 ஷை தலைச்சங்காடு-காந்தாரம் (1)
11 திருநாவுக்கரசு—திருத்தாண்டகம்-திருநாகேச்சுரம் (2)
12 திருப்புகழ்—பொதுப்பாடல்கள்-நீலங்கொள் (1237)

சாரம்' என்னும் நூலின் உபோற்காதத்தில் "வேதம் என்னும் மொழி ரூடப் பெயரால் இருக்காதி வேதங்களையும், யோகப் பெயரால் காமிகாதி ஆகமங்களையும் உணர்த்தும்" என்றும், சாந்தோக்கிய உபநிடதத்து எ, கஉ-ம் மந்திரங்களில் "இதிகாச புராணமானது வேதம்" என்றுங் கூறப்பட்டிருக்கின்றன.

இன்னும் இச்சொல் நாற்பொருளை விளக்குந் தமிழ் நூற்களையுங் குறிக்குமென்பதற்குத் தக்க சான்றுகளும் உள. மறை என்னுஞ் சொல் தமிழ் மறையையுங் குறிக்குமென்பது முன்னர் நன்கு நிறுவப் பெற்றது. மறையென்னுஞ் சொல் வருமிடங்களிலெல்லாம் வேத மென்னுஞ் சொல்லும் தமிழ்ப் பெரியார் வாக்குக்களில் வருகின்றமையின் இவற்றின் பொருளும் ஒத்திருக்க வேண்டுமாதலின் வேத மென்னுஞ் சொல் தமிழ் வேதங்களையுங் குறித்தல் இயல்பே. 1.

திருஞான சம்பந்தர் வேதவாயர் 2, வேதகீதர் 3, வேதப் புரவலனர் 4, வேதபாரகர் 5 என்றும் அவர் பாடல்கள் தமிழ் வேதம் 6, சுருதி 7 யென்றும் அழைக்கப்படுதலில், வேத மென்னுஞ் சொல் இவர் பாடிய பாடல்களையும் அதனையொத்த மற்ற திருமுறைகளையுங் குறிக்குமன்றோ? பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரிய புராணத்தை "அம்பலவாடியாரெல்லாம் சுருதி மொழியிதுவெனக் கைதொழுது கேட்டார்" 8 என்றும்,

---

1 இதனை வற்புறுத்தத் திருவாளர் சுவாமிநாத பண்டிதர் பதிப்பித்த 'திருவடங்கற்றல முறையின் முகவுரையில் 'திராவிட வேதம் பூர்வீகமே' தமிழ் வேதத் திருப்பதிகம்', 'தமிழ் வேத சிக்ஷை', 'இருவகை வேத வியல்கள்', 'ஆரிய வேத, தமிழ் வேதம் பூர்வீகமே' என்னுந் தலைப்பின் கீழ்க் கண்டுகொள்க.

2 பெரிய புராணம்—திருஞான சம்பந்தர்—(557)
3 ஷை — ஷை —(469)
4 ஷை — ஷை —(479)
5 ஷை — ஷை —(965)
6 ஷை — ஷை —(357, 362)
7 பதினோராந் திருமுறை—திருஞான சம்பந்தர் திருவந்தாதி(48)
8 சேக்கிழார் நாயனர் புராணம்—(79)

"திருத்தொண்டர் புராணமெழு தியதிருமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி, இருக்குமுதன் மறை நான்கி னின்றுமுதலாக விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று கருத்திருத்தி" 1 அதற்கு வேண்டிய பணி ஆற்றிய தாக உமாபதி சிவமே உணர்ந்துரைத்தலானும் இவை யாவும் வேதங்களாகக் கொள்ளப்பட்டன வென்பதற்கு வேறு சான்று வேண்டிற்றிலது.

இன்னும் ஆரிய வேதந் தமிழ் வேதமென்றும், "ஆரியத் தொடு செந்தமிழ்ப்பயன்" 2 என்றும், 'செந்தமிழோடாரியனை' 3 என்றும் பல பெரியார் பிரித்துக் கூறுதலின் பொதுவாக வேதமென்புழி இரண்டையுங் குறித்தலன்றி ஆரிய வேதங்களைத் தாம் குறிக்குமெனல் சிறிதும் பொருந்தாது. நாற் பொருள் நூற்கள், மந்திரங்கள், ஏனைய அறிவு நூற்கள் என்னும் பொருள் களில் வேத மென்னுஞ் சொல் வந்துறும் பொழுதெல்லாம், அச் சொல் தமிழ் நூற்கள், மந்திரங்களையுங் குறிக்கும். என்னெனின் ஆரியத்துள்ளவைதாம் நூற்கள், மந்திரங்கள், மற்றவை அல்ல வென்று பித்தாற்றான் கூறவியலும். இறைவனே 'ஆரியமுந் தமிழும் முடனே சொல்லி' யிருத்தலின் இறைவனுலியற்றப் பெற்ற வேதம் அல்லது மறை என்று தமிழாசிரியரியம்பும் பொழுதெல்லாம் ஓரஞ் செய்யாது இருமொழியிலுள்ளவற்றையுங் கொள்ளல் வேண்டும். அவற்றுள்ளுந் தமிழ் மொழியிலுள்ள வற்றையே முன்னர்க் கொள்ளல்வேண்டும். என்னை? இறைவன் இம் மொழியையே அதிகச் சிறப்புறுத்தி யிருத்தலினானும், இவை தமிழ்ப் பற்றுடையோர் கூற்றாதலினாலும், இறைவன் வழிபாடு தென்னாட்டிற்றான் முன்னர் விளங்கிப் பின்னர் வடநாட்டாராற் கையாளப் பெற்றதென்று தக்க சரித்திர ஆராய்ச்சியாளர் கூறு தலினாலுமென்க. தமிழிலுள்ள வைத்திய நூற்களைத் தொகுத்து அவற்றிற்கு ஆயுர்வேதமெனப் பெயரிட்டால் எவ்வாறு பிழை யாகாதோ, அவ்வாறே, நாற் பொருள் நூற்களைத் தொகுத்து

1 ஷை (86)
2 திருஞான சம்பந்தர்—[illegible]—திருவாலவாய்—(4)
3 திருநாவுக்கரையர்—தி[illegible]யடுதுறை—திருத்தாண்டகம்—(10)

வேதமென்றும், தமிழ் மந்திரங்களைக் குறித்து மந்திர வேதங்களென்றுங் கூறுவது பொருந்தியதே யென்க.

வேதந் தமிழால் விரித்தார் 1 என்னும் அருண்மொழியைக் கொண்டு திருஞான சம்பந்தர் இவ்வாரிய வேதத்தை ஓதாதுணர்ந்து தமிழ்ப்படுத்தின ரென்பர் சிலர் 2. வேதங்களிற் கூறப்பட்டுள்ள வேள்விகள், கடவுளர், மந்திரங்கள், கருமங்கள், கதைகள், தத்துவ ஆராய்ச்சிகள் சம்பந்தர் தேவாரத்துச் சிறிதே கையாளப்பெற்றும், இத் தேவாரத்துட் கூறப்பெறும்

"குருவருளும், வெண்ணீறெழுத் தஞ்சுங்கோயி
லானுருவு மென்றலை மேலாக்குந் திருவடியுஞ்
சிட்டான வர்ச்சனையுந் தொண்டும்"

அவ் வேதத்துள் ஒரு சிறிதுங் காணப்படாதிருந்தும், இவ்விரண்டிலும் எங்கேனும் தோன்றும் ஒரு சில ஒற்றுமைகளைக்கொண்டு சம்பந்தர் ஆரிய வேதங்களையே தமிழ்ப்படுத்தினரென்பது கவிச்சிங்கமாகிய இரவீந்திரநாத் டாகூர் (Rabindranath Tagore) தம் பாடல்களை விவிலிய நூல் (Bible) உணர்ச்சியாற்றான் பாடினரென்று சில பாதிரிமார்கள் சொல்லிக்கொள்வதை ஒக்கும். பின் சம்பந்தர் தமிழ் செய்தற்கு ஆதாரமாயிருந்த வேதம் யாதுதானெனின் அவை நாதவிந்துகளே. இவற்றையே "தேவருமெழுதவொணா மறையைத் தமிழ் செய்து திருப்பதிகம் பாடும் மூவரும்" 3 என்றார் உமாபதிசிவம். ஈண்டு தேவருமெழுதவொணா மறை, மானுடராலு மெழுதப்படும் ஆரிய வேதத்தைக் குறியாது நாதவிந்துகளையே உணர்த்துதல் காண்க. இவற்றையே

1 திருஞான சம்பந்தர் புராணம்-(289)-இதற்கிணங்கவே "வேதந் தமிழ் செய்தமாறன் சடகோபன்" என்றழைக்கப்படுகின்றனர் நம்மாழ்வார். இவரிருவரும் ஒரு வேதத்தையே அடிப்படையாக் கொண்டு எவ்வாறு தம்முள் மாறுபடும் இரு நூல் செய்தனரோ அறியேம்.

2 இவ்வாறே இருக்கு மொழிப்பிள்ளையார் முதலிய வாக்கியங்களை கொண்டு சம்பந்தர் தேவாரம் இருக்கு வேதத்தின் மொழிபெயர்ப்பு என்று கூறுவோர்க்கு விடை அடுத்த கட்டுரையில் அளிப்பாம்.

3 சேக்கிழார் நாயனார் புராணம்—(89)

"எல்லையிலா மறைமுதன் மெய்யுடனெடுத்த வெழுது மறை மல்லனெடுந் தமிழாலிம் மானிலத்தோர்க்கு" 1 உரைத்தார் சம்பந்தர் என்றார் சேக்கிழார். ஈண்டும் குடிலையைத் தகரமெய் யுடன் சேர்த்ததாலாகும் எழுதும் மறையையே தமிழில் உரைத்த தாகக் கூறப்படுதலன்றி ஆரியவேதத்தைத் தமிழில் விரித்ததாகக் கூறப்படாமை காண்க. இதற்கேற்பவே ஆகமம் வந்தவிதங் கூறுமிடத்து மறைஞானசம்பந்தர் "இருக்குமிவை யெல்லாஞ் சுத்தவித்தை தன்னில்" என்றும் பின் அவற்றிலிருந்தே "பாக்கு மூல கெங்குமெனப் பார்" 2 என்றுங் கூறியுளர். இத்தத்து வங்களையே அருளாலுணர்ந்த மூவரும் அவற்றைத் தக்கபடி தமிழ்ச் சொற்றொடராக்கின ரென்பதே "வேதந்தமிழால் விரித் தார்", "திருந்த வேதந் தண்டமிழ் தெரிதரு புலவோனே" 3 என்பவற்றின் கருத்தாம். இதை வற்புறுத்தும் சம்பந்தர் சொற்களாவன:—

"நல்லகேள்வித்தமிழ் ஞானசம்பந்தன்" 4

"சந்தமார் தமிழ்கேட்ட மெய்ஞ் ஞானசம்பந்தன்" 5

"உன்னியவருமறை யொலியினை முறைமிகு பாடல்செய்
இன்னிசையவருறை யெழிறிகழ் பொழில்வீழிமிழலை" 6

என்பனவாதியாம். இவற்றுள் முதலிரண்டு வாக்கில் இன்னார் தமிழ் கேட்டதாகக் குறிப்பது சுத்த வித்தையிலிருந்தே யன்றித் தமிழ்ப்புலவர்பாலிருந்தன்றே யென்பது யாவருமறிந்த செய்தி யாம். இவ்வாறே மூன்றும் வாக்கிலுள்ள அருமறை யொலி யாவது நாதவிந்துக்களாவதும், அதனை முறையாகச் செய்யும் பாடலாவது தாமும், திருநாவுக்கரையர் முதலிய அடியார்களும் பாடுந்தமிழ் மறைகளாவதுந் தெள்ளியவாம்.

---

1 திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் புராணம்—(75)
2 சைவசமய நெறி—(329)
3 திருப்புகழ்—பொதுப் பாடல்கள், 'இருந்த வீடும்' (1050)
4 திருஞான சம்பந்தர் —செவ்வழி—நாகைக் காரோணம்—(11)
5 ௸ —கௌசிகம்—திருவாலவாய் காட்டுமாவது (11)
6 திருஞானசம்பந்தர்—சாதாரி-திருவீழிமிழலை (11)

ஆதலின் வேதமென்னுஞ் சொல் நாதவிந்துக்களையும், மந்திர வாக்கியங்களையும், பல அறிவு நூற்களையும், நாற்பொருள் விளக்கும் நூற்களையுங் குறிக்குமென்பதும், நாற்பொருள் நூற்களைக் குறிக்கும்பொழுது இருக்காதி வேதமன்றி ஆகமபுராண இதிகாசங்களையும், இஃதன்றித் தமிழ்மந்திரங்களையும், அறிவு நூற்களையும், நாற்பொருள் நூற்களையுங் குறிக்குமென்பதும், திருஞானசம்பந்தராதி தேவார முதல்வர்கள் நாதவிந்துக்களையே தமிழில் விரித்தார்களேயன்றி ஆரிய வேதங்களைத் தமிழில் இயற்றினாரென்பது தவறென்பதும் பெறும்.

இனி இருக்கு, சாமம், ஆறங்கம் என்னுஞ் சொற்களும் அப்பெயருடைய வடமொழி வேதங்களை, நூற்களைத்தாம் குறிக்கின்றனவா அல்லது வேறுபொருள்களுமுடையனவாவென்று ஆராய்வாம்.



# சங்க நிகழ்ச்சிகள்.

தமிழன்பும் சைவக்கனிவும் நிறைந்துயரும் திருவாளர், S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் (பள்ளிக்கூடங்களின் உதவி ஆராய்ச்சியாளர்) தஞ்சைக்கு மாற்றப்பெற்றிருப்பது நமது சங்கத்திற்கு ஒரு நற்பேறாகும். இவர்கள் வருகையின் பயனாகச் சங்கத்தே விரிவுரைக் கூட்டங்கள் அடிக்கடி நிகழ்தற்கு உரிய ஏற்பாடுகள் தோன்றியுள்ளன. சுந்தரமூர்த்தியடிகள் திருவிழா இவர்கள் அரிய விரிவுரையால் மிகு சிறப்பாக நடைபெற்றது. இவர்கள் வேண்டுகோளால், சங்கத்தே வாரந்தோறும் உயர்திரு. வாலையானந்த சுவாமிகள் எழுந்தருளிச் சித்தாந்த பாடம் நடாத்தி வருகின்றார்கள். இவர்கள் தம் வேலையில் மேலும் மேலும் உயர்ந்து இத்தஞ்சைமா நாட்டிலேயே வாழ்ந்துவரத் தமிழ்த் தாய் தண்ணருள் புரிவதாக.

வே.

